[Sri M. Kalyanasundaram] [7th March 1958

வேண்டும். ஆகவே சிறு தொழில்களை சர்க்காரே எடுத்து நடத்த வேண்டும். பஸ் தொழிலை எடுத்து நடத்துகிறார்கள். அதில் பல குறைபாடுகள் இருந்தாலும் அதன் மூலம் சர்க்காருக்கு வருஷத்திற்கு 23 லட்சம் ரூபாய் வருமானம் வருகிறது. நமக்கு வருமானம் வரக்கூடிய சிறு தொழில்களை சர்க்காரே ஏன் எடுத்து நடத்தக்கூடாது என்று கேட்கிறேன். இரண்டு மூன்று வருஷங்களாக பேப்பர் தொழிலைப்பற்றிச் சொல்லிக் கொண்டு வந்தோம். அதையும் காணோம். நம் ராஜ்யத்தில் எண்ணெ சுத்திகரிப்பு தொழிற்சாலை இல்லை. நாம் பெட்ரோலை அப்படியேதான் வரவழைத்துக்கொண்டிருக்கிறோம். நமது ராஜ்யத்திற்கு ஒரு எண்ணெய் சுத்திகரிப்பு தொழிற்சாலை அவசியம். அதைப்பற்றியும் மூன்று வருஷங்களாக வற்புறுத்திக்கொண்டு வருகிறோம். அங்கிருந்து பெட்ரோலாக ரயிலில் வருவதை விட சென்னை வந்து, இங்கே சுத்திகரிப்பு செய்வது
6-10 p.m. பல தொழிலாளிகளுக்கு வேலை கிடைப்பது மட்டும் அல்ல. சர்க்காருடைய வருவாயை உயர்த்துவதற்கு வழியாக இருக்கும் என்று சென்ற ஐந்தாறு வருஷங்களாகச் சொல்லியிருக்கிறோம். அவற்றையெல்லாம் மூன்றாவது வருஷத்திலாவது பார்க்கலாமென்றால், பார்க்க முடியாத நிலையில்தான் இருக்கிறோம் என்று தெரிவித்து, இந்த பட்ஜெட்டின் விளைவு அவ்வளவு திருப்திகரமாக இல்லையென்று தெரிவித்துக்கொள்கிறேன்.

நம்முடைய ராஜ்யம் சம்பந்தப்பட்ட மட்டில் உணவு நிலைமையும், வேலையில்லாத் திண்டாட்ட நிலைமையும், தொழிலாளி, விவசாயிகள் நிலைமையும் இன்னும் நெருக்கடியாகத்தான் போய்க்கொண்டிருக்கிறது என்ற உண்மையை நாம் ஆராயாமல், நல்ல கவர்ச்சிகரமான முறையிலே சித்தரித்துக் கொண்டு போவது நம்மை நாமே ஏமாற்றிக்கொள்வதாகும் என்று தெரிவித்து, இவ்வளவு நேரம் எனக்குப் பேச அனுமதித்த தலைவர் அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்து, என்னுடைய உரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகின்றேன். வணக்கம்.

6-11 p.m. DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again tomorrow at 1 p.m.

The House then adjourned.

## V.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A. Statutory rules, orders and notifications.

69. *Notification issued with G.O. Ms. No.* 183, *Home, dated* 24th *January*, 1958 *reducing the Court Fees payable under Article* 10 (*j*) *of Schedule II to the Madras Court Fees and Suits Valuation Act,* 1955 *on applications and petitions presented to the Board of Revenue, Madras by Harijans.* [*Laid on the Table of the House under Section* 82 (2) *of the Madras Court Fees and Suits Valuation Act*, 1955.]